5 காசுகள்

பதிவு எண் எம்.8798

# தீக்கதிர்

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி[மார்க்சிஸ்ட்]நாளிதழ்

கதிர் 12 மதுரை 4—9—74 புதன் மலர் 206

## ...ஜ மாண்டது ...ண் மை

...சப் 1— ...ஷசந்திர ...த காலத்தில் ...ந்து டோக்கி ஏரோப்பிளே ...ு கொண்டிருந்த ...பத்துக்குள்ளாகி ...மரண... போனுர் என்று இந்திய சர்க்காரால் நியமிக்கப்பட்ட விசாரணைக்கமிட்டி அறிக்கை சமர்ப்பித்துள்ளது.

இந்தக் கமிட்டிக்கு முன்னுள் நீதிபதி ஜி டி,கோஸ்லா தலைவராக இருந்தார்.

## காவலர்களா? வழிப்பறிக்காரர்களா?

புதுடெல்லி, செப். 2—

போக்குவரத்து விதிகளை மீறியவர்கள் என போலீசாரால் குற்றஞ்சாட்டப்படுபவர்களிடமிருந்து டெல்லி போலீசார் நாளொன்றுக்கு ஒரு லட்சத்து 60 ஆயிரம் வரை லஞ்சமாக் வாங்குகிருர்களாம். இதில் மேல் அதிகாரிகளுக்கும் பங்குண்டு. மத்திய ரோடு ஆராய்ச்சி நிறுவனம் இதனை தெரிவித்தது'

## அகவிலைகளைக் குறைத்திட

### அரசினை நிர்ப்பந்திக்க

# பாதயாத்திரையும் சைக்கிள் யாத்திரையும் புறப்பட்டன

படியரிசி 5 ரூபாய், 6 ரூபாய் மேனிக்கு —அல்லது, கிலோ அரிசி 3 ரூபாய், 3½ ரூபாய் மேனிக்கு வாங்கி உண்டு வாழ ஏழை, நடுத்தர மக்களுக்கு முடியவில்லை; வகையும் இல்லை,

### வாழ வேண்டுமா? வேண்டாமா?

இவர்கள் வாழ வேண்டுமா? வேண்டாமா? இவர்களுக்கு உயிர் வாழும் உரிமை உண்டா? இல்லையா?

இதுதான் இன்றைய கேள்வி.

வாழும் உரிமை உண்டு என்ருல் அவர்களது வாங்கும் சக்திக்கு ஏறப விலைவாசிகளை இறக்க வேண்டும். இல்லையேல், ஏறி விற்கின்ற விலைகளை எட்டிப் பிடிக்கக்கூடிய அளவுக்கு ஊதியத்தை உயர்த்த வேண்டும்.

விலைவாசி உயர்வுக்கு ஏற்ருற்போல் ஊதியத்தை உயர்த்திக் கொடுகக இது வரை மத்திய அரசும் முன்வரவில்லை; மாநில அரசும் முன்வரவில்லை. எந்த வொரு ,முதலாளியோ, நிலவுடைமையாளரோ முன்வரவில்லை.

### வெள்ளையர் சம்பளம்

விலைவாசி ஏற்றத்துக்குக் தக்கவாறு ஈட்டுபபடி கொடுப்பதாக இருந்தால் இன்று எவ்வளவு கொடுக்க வேண்டியிருக்கும்?

வெள்ளையர்களின் கடைசி காலத்தில், தினம் 1 ரூபாய் கூலி கிடைத்தது. விலைவாசி 1 ரூபாய்க்கு 4 படி அரிசியாக இருந்தது.

மாதம் ரூ30 ஊதியம் என்ருல்,அதற்கு 120 படி அரிசி கிடைத்தது.

### திட்டபலன் தான் போகட்டும்

சுதந்திரம் கிடைத்து, நாலு திட்டங்கள் நிறைவேற்றப்பட்டும் ஏழை, நடுத்தர உழைப்பாளி மக்களுக்கு ஒருபைசா ஊதிய உயர்வும் கிடைக்காமல போனுலும்போகட்டும். அவர்களே அனுபவிக்கட்டும்.

ஒரு மாதத்திற்கு 120படி அரிசிவாங்குவதறகுஅன்னிய வெள்ளையர்கள் எவ்வளவு பணம் கொடுத்தார்களோ அந்த அளவு மதிப்புள்ள பணமாவது இன்று கொடுக்க வேண்டாமா?

### வெள்ளையன் சம்பளம் இன்று எவ்வளவு?

அப்படி 120 படி அரிசி வாங்க, ஊதியம் கொடுப்பதாக இருந்தால், படியரிசி ரூ. 5 மேனிக்கு, 120 படி அரிசி வாங்குவதற்கு ரூ. 600 கொடுக்க வேண்டும். கொடுத்தால்தான் வெள்ளைக்காரர்கள் கொடுதத சம்பளத்துக்கு சமம்.

ஆனுல், ஒரு பஞ்சாலைத் தொழிலாளிக்கோ இன்ஜினீயரிங்தொழிலாளிக்கோ அரசு ஊழியர்களுககோ ரூ. 600 கிடைப்பது இல்லை, சுருங்கக் கூறினுல், உழைக்கும மக்களில் 90 சதவிகிதத்தினருககு இந்த வருமானம் கிடைப்பது இல்லை.

### பாதிகூட இல்லையே

மாதம் ரூ. 300 கிடைத்தாலும், அது வெள்ளையர் காலத்திய 15 நாள் சம்பளம்; அதாவது 60 படி அரிசி வாங்குவதற்கான சம்பளம்தான்.

இதிலிருந்து என்ன தெரிகிறது?

மாதம் ரூ. 300 சம்பளம் பெறுகிறவர்களுக்கெல்லாம், வெள்ளைக்காரர்கள் கொடுத்த வந்த சம்பளத்தில் சரிபாதி தான் கொடுக்கிருர்கள் என்று அருத்தம்! அதாவது, சரிபாதியாக வெட்டிவிட்டார்கள் என்று அருத்தம்! அதாவது, சரிபாதி குடலை அறுத்து விட்டார்கள் என்று அருத்தம்!

### ஏற்ற ஈட்டுப்படி இல்லை

ஆகவே, அனுபவத்தை வைத்துப் பார்க்கின்றபோது, காங்கிரஸ் அரசும் சரி, தி. மு. க- அரசும் சரி, தனிப்பட்ட முதலாளிகளும் நிலச்சுவான்களும் சரி, விலை உயர்வுக்கு ஏற்ருற்போல ஊதிய உயர்வு கொடுக்கவில்லை.

விலையை எட்டிப்பிடிக்கக்கூடிய அளவுக்கு காசு தராவிடடால், காசு இருக்கிற அளவுக்கு விலையை இறக்கவேண்டும் அல்லவா! இதுவும் அதுவும் இணைந்திருப்பதினலே, அதுவும் செய்யமாடடார்கள்.

### வாழப்பிறந்தோம்

அப்படியானுல் நாட்டு மக்கள் சாவதா? கனியும் கிழங்கும் தானியங்களும் கணக்கின்றி உறபத்தி செய்த உழவர் குடி மக்கள் சாவதா? பஞ்சினில் ஆடையும் பட்டில் உடையும பண்ணிமலைகளென வீதி குவித்த மக்கள் சாவதா? விமானங்களையும் கப்பல்களையம் இரயில்களையும் பஸ்களையும் ஓட்டும் டாட்டாளி மக்கள் சாவதா?

முடியாது! முடியாது! முடியாது!

வாழப் பிறந்தோம்! சாகமாட்டோம் —என அலைகடலின் பேரொலி என ஆர்ப்பரிக்கிருர்கள்.

### கோரிக்கை என்ன?

நிலத்தில் இறங்கி வேலை செய்யாத நிலப்பிரபுக்களிடம் உள்ள உணவு தானியங்கள் முழுவதையும்—அதாவது 10 ஏக்கருக்குமேல் நிலம் உள்ளவர்களிடம் அவர்களது தீனித்தேவை, குடும்பத் தேவை போக—விற்பனைக்காக உள்ள உடரிஅனைத்தையும் அரசே, கொள்முதல் செய்ய வேண்டும்.

இது முடிந்தபின், லெவிச்குச் செல்ல வேண்டும்.

5 ஏக்கருக்குமேல் 10 ஏக்கர் வரை நிலம் உள்ள சிறு நிலவுடைமையாளர்களிடம், ஏக்கருக்கு இவ்வளவு என்று லெவி கொள்முதல் செய்யவேண்டும்.

5 ஏக்கருக்கு உள்ளே உள்ளவர்களிடம் கொள்முதல் செய்யக்கூடாது. அவர்களாக கொள்முதலுக்கு அளக்க முன் வந்தால், லெவி நெல்லுக்குக் கொடுக்கும் விலையைக் காட்டிலும் சிறிது கூடுதல் விலை கொடுத்து வாங்கிக் கொள்ள வேண்டும்,

இவர்கள் அரசாங்கத்துக்கு விற்கா விட்டாலும் பரவாயில்லை, அவர்களாகவே வெளிமார்க்கெட்டில் விற்ருலும், அதிக விலை வைத்து விற்க முடியாது. ஏனென்ருல் அரசாங்கமே கொள்முதல் செய்து, மலிவு விலைக்கு விற்க முன்வரும் நிலைமை ஏற்படுவதாயிருந்தால் — பதுக்கி வைத்து விலைவாசிகளை ஏற்றுகின்ற நிலப்பிரபுக்களிடமும், மொத்த வியாபாரிகளிடமும் நெல்லை விட்டு வைக்காமல் அரசே கைப்பற்றுவதாக இருந்தால் — விலைவாசி எப்படி ஏறும்? அதிக விலை கொடுத்து வாங்க வேண்டிய அவசியம் தான் என்ன?

ஆகவே, சிறு நில விவசாயிகள்வெளிமார்க்கெட்டில் விற்ருலும், அதிக விலைக்கு விற்க முடியாது.

இதற்காகத்தான் பாதயாத்திரைநடத்துகிருர்கள், இதற்காகத்தான் சைக்கிள் யாத்திரையும் நடத்துகிருர்கள்".

## ஆட்சியாளரின் மாய்மாலங்கள் அம்பலம்

# அவசரச் சட்டங்கள் வந்தபின் விலைவாசிகள் குறையவில்லை மேலும் மேலும் உயர்வு

புதுடெல்லி, செப். 2—

**தனியார் துறை, பொதுத் துறை தொழிலாளர்களின் மத்திய, மாநில அரசு ஊழியர்களின் வயிற்றில் அடிக்கும் வகையில் கட்டாயச் சேமிப்பு சட்டத்தை அவசரச் சட்டமாக அவசர அவசரமாக கொண்டு வந்தது, மத்திய அரசு. இந்த நடவடிக்கையை விலைவாசி உயர்வையும், பணவிக்கத்தையும் தடுக்க மேற்கொள்ளப்படும் நடவடிக்கை என்று வர்ணித்தனர். ஆனுல், விலைவாசி உயர்வோ வழக்கம் போல்நாளுக்கு நாள் படுவேகத்தில் போய்க் கொண்டிருக்கின்றன என்பதையே விபரங்கள் கூறுகின்றன.**

ஜூலை 6-ந் தேதியன்று அந்த அவசரச்சட்டம் அரசாங்கத்தால் பிறப்பிக்கபபட்டது அதற்குப் பிறகு ஏறியுள்ள விலைவாசி உயர்வைக் சவனித்தால் அந்த அவசரச் சட்டம் எந்த அளவுக்கு தொழிலாளர், மக்கள் விரோத நடவடிக்கையைக் கொண்டுள்ளது எனத்தெரியும.

### ஏறுதே விலைவாசி விஷம் போல

1962-ம் ஆண்டு விலைவாசி 100 என்ற அடிப்படையில் ஜூலை 6ந் தேதி அரிசி, கோதுமை ஆகிய உணவு தானியங்களின் விலைவாசி குறியீட்டெண் 383 · 7. ஆனுல் ஆகஸ்ட் 10ல்அவைகளின விலைவாசி குறியீட்டெண் 405·9ஐ பிடித்துவிட்டது. 24 நாட்களில் 5½சத வீதம் வரை தானியங்களின் விலை உயர்ந்துள்ளது.

ஜூலை 6ந் தேதி ஏனைய நவ தானியங்களின் விலைவாசி குறியீட்டெண் 364·6ஆகும். ஆனுல் ஆகஸ்ட் 10ல் 385.4ச்கு ஏறிவிட்ட்து. 26 நாட்களில் நவதானியங்களின் விலை 6 சதவீதம் உயர்ந்தது.

அதேபோல் ஜூலை 6-ல் பருப்பு வகைகளின் விலைவாசிகுறியீடடெண் 469.8 ஆக இருந்தது. ஆகஸ்ட் 10. லோ 493. 6-க்கு உயர்ந்துவிட்டது. 26 நாட்களில் பருப்பு வகைகளின் விலை 5 சதவீதம உயர்ந்துள்ளது.

### உள்ளதையும் பறிக்கிறது

இப்படி நிமிட்த்திற்கு நிமிட்ம் விலைவாசி உயர்வு உயரே சென்று கொண்டிருக்கிறது. இப்படிப்பட்ட விலைவாசி உயர்வை ஈடு கட்டத்தான் பஞ்சப்படியாக பெற்றுவந்தனா, தொழிலாளர்களும் ஊழியர்களும்.

ஆனுல், பணவீக்கம்,விலைவாசி உயர்வு ஆகியவைகளைத் தடுக்கும் நடவடிக்கை என்ற பெயரில் கட்டாயச் சேமிப்புச் சட்டத்தை விதித்து அப் பஞ்சப்படியையும் பறித்துக் கொண்டது அரசாங்கம்.

### போராட்டமே வழி

ஆனுல், விலைவாசி குறையப் போவதுமில்லை, அதன் தொடர்ச்சியாக பண வீக்கத்தையும் தடுக்கப் போவதுமில்லை.

ஏனெனில் அவைகளுக்கு மூலஊற்றுகளாகிய கறுப்புப் பணம், பதுக்கல், கள்ள மார்க்கெட் இவைகளை அரசர்ங்கம் ஒழித்துக் கட்ட மறுக்கிறது.

அது மட்டுமல்ல. விலைவாசி உயர்வுக்கு சம்பள உயர்வே காரணம் என கூச்சநாச்சமில்லாமல் வேறு கூறுகின்றனர்.

எனவே உழைக்கும் மக்களை ஒடுக்கும், அவர்களின் வயிற்றிலடிக்கும் நடவடிக்கைகளை எடுத்து பிரச்னைகளை திசை திருப்ப முயல்கிறது. பிரச்னைகளுக்கு முடிவுகட்ட் விரும்பவிலலை அரசாங்கம்.

எனவே பாதிக்கப்படுகின்ற கரத்தாலும், கருத்தாலும் உழைக்கின்ற மக்கள் இவ்வரசின் இத்தகைய போக்கை எதிர்த்து போராடுவதைத் தவிர வேறுவழி இல்லை.

## மேற்கு வங்கத்தில் காங்கிரஸ் ஆட்சியில் 35 லட்சம் மக்கள்

# பட்டினியால் பரிதவிப்பு!

கல்கத்தா செப் 1—

மோசடித் தேர்தல் மூலம் ஆட்சிக்கு வந்த காங்கிரசின் முதலமைச்சர் சித்தார்த்த சங்கர்ரே ஆளுகின்ற மேற்கு வங்கத்தில், புருளியா, பங்குரா, மித்னுப்பூர் ஆகிய மாவட்டங்களில் 35 லட்சம் மக்கள் உணவுப் பஞ்சத்தினுல் பட்டினி கிடந்து பரிதவிக்கிருர்கள். இதனுல் பட்டினிச் சாவுகள் ஏற்படும் அபாயம் ஏற்பட்டுள்ளது.

அரிசி விலையும், மற்ற அததியாவசியப் பண்டங்களின் விலையும் எட்டிப் பிடிக்க முடியாத அளவுக்கு உயர்ந்து விட்டன.

இதனுல்,அவர்கள் அரிசி உணவுச் சாபபிட்டு மாதங்கள் பல ஆகிவிட்டன. புல்லையும் வேர்களையும் மற்றும் சிறிதளவு கஞ்சியையும் சாப்பிட்டுக் கொண்டு, தங்கள் உடல்களில் உயிரை ஒட்ட வைத்துக் கொண்டிருக்கிருர்கள்.

உண்ண உணவின்றி வாடித் துவண்ட மக்கள் பலர், சாபபிடக் கூடாத காய்களையும். கிழங்குகளையும் சாப்பிட்டதால் குடல் நோயும் வயிற்றுக் கடுப்பும் வேறுபல நோய்களும உண்டாகி பொறுக்க முடியாத அவதிக்குள்ளாகியுள்ளனர்.

இம்மாவட்டங்களில் ரேஷன் கடைகள் இருக்கின்றன. ஆனுல் இவற்றில் அரிசி இருப்போ மிக மிகக் குறைவு, பட்டினியால் மக்கள் புழுவாய் நெளிந்த போதும், காங்கிரஸ் ஆட்சியாளர்கள் ரேஷன் கடைகள் மூலம் குறைந்தவிலைக்கு அரிசி தர தயாரில்லை.

ஒரு கிலோ அரிசியை 4 ரூபாய்க்கு விற்கிருர்கள்! பட்டினியைப் பயன்படுத்தி கொண்டு அரசாங்கமே பகற்கொள்ளையடிக்கிறது.

மெஜியா, சல்ட்டோரா சாட்ளு, காஜல்கட்டி முதலான இடங்களில் விவசாயத் தொழிலாளர்களது நிலைமை படுமோசமாக உள்ளது

பட்டினியால் மக்கள் செத்துமடியும் அபாயம் இருந்த போதிலும், மேற்கு வங்க மாநில காங்கிரஸ ஆட்சியாளர்களோ மத்தியில் உள்ள காங்கிரஸ் ஆட்சியாளர்களோ ஒரு நிவாரண நடவடிக்கையும் எடுத்துக் கொள்ள வில்லை.

"உடனடியாக இந்த மக்களுக்கு அராங்கம் உணவளிக்கா விடடால் ஏராளமானேர் செத்துமடியநேரிடும்" எனறு, மாநில சட்டமன்ற உறுப்பினர் சம்புநாராயண் கோஸ்வாமி என்பவர் எச்சரித்துள்ளார்.

## முதலாளித்துவத்தின் அவலங்கள்!

உலகில் [முதலாளித்துவ நாடுகளில்] 37கோடியே 50 லட்சம்மக்கள் வறுமையின் பிடியில் சிக்கித் தவிக்கின்றனர். சத்துணவு கிடைக்காத காரணத்தினுல், ஒவ்வொரு நாளும் 80 ஆயிரம் பேர் சாகிருர்கள். ஆப்பிரிக்காவில் ஒவ்வோர் ஆண்டும், பிறக்கின்ற குழந்தைகளில் மூன்றிலொன்று 5 வயதுக்கு முன்பே இறந்துவிடுகிறது

அதே சமயம், முதலாளித்துவ நாடுகளில் பெருமளவில் உணவு தானியங்கள் நாசம் செய்யப்படுகிறது. எதற்காக? விலைவாசியை உயர்த்துவதற்காக, வேண்டுமென்றே உற்பத்தியையும்குறைக்கிருகள். எதற்காக? விலைவாசி ஏறுநடை போடுவதற்காக.

கடந்த ஐந்து வருடங்களுக்குள் 26 லட்சத்து 47 ஆயிரத்து 887 டன் பழங்களையும், காய்கறிகளையும் ஐரோப்பிய முதலாளித்துவ நாடுகளில் முதலாளிகள் நாசம் செய்தனர்—விலைவாசியை உயர்த்துவதற்காக!

ஒரு வியட்நாம்காரனைக்கொல்வதற்குஅமெரிக்கா 50 ஆயிரம் டாலர் செலவு செய்யும். ஆனுல், அமெரிக்க நாட்டிலுள்ள ஓர் ஏழையின் மருததுவச் செலவுக்கு உதவ 50 டாலர்கூட செலவழிக்க அமெரிக்க அரசு தயாரில்லை.

அமெரிக்காவில் சுமார் 2 கோடியே 60 லட்சம் ஏழைகள் உள்ளனர். அவர்கள் வேலை கிடைக்காமல்—பணமில்லாமல் தவிக்கின்றனர். ஆனுல், இதைப்பற்றி அமெரிக்க ஏகாதிபத்திய ஆட்சியாளர்கள் கவலைப்படுகிருர்களா? அதுதான் இல்லை. ஆனுல், 2 கோடியே 60 லட்சம் குண்டுகள் தயாரிக்க பணமில்லையே என்றுதான் கவலைப்படுகிருர்களி.

அமெரிக்காவில், 790 பேருக்கு ஒரு டாக்டர் இருக்கிருர். மேற்கு ஜெர்மனியில் 730 பேருக்கு ஒரு டாக்டர்: பாகிஸ்தானில் 15 ஆயிரம் பேருக்கு ஒரு டாக்டர்; டான்ஸானியாவில் 19 ஆயிரம் பேருக்கு ஒரு டாக்டர்; கானுவில் 29 ஆயிரம் பேருக்கு ஒரு டாக்டர். அந்நாடுகளிலெல்லாம், சோற்றுப்பஞ்சத்தினுலும், மருத்துவமனைப் பற்ருக்குறையினுலும், ஏராளமான மரணங்களும், நோய்களும் உண்டாகின்றன.

ஏகாதிபத்தியமும், முதலாளித்துவ—நிலப்பிரபுத்துவமும் சேர்ந்து உலக மக்களுக்கு வழங்கிய தரித்திரங்கள்தாம் இவையெல்லாம்.

(கியூபா நாட்டு கம்யூனிஸ்ட் கட்சியின் ஏட்டான "கிரன்மா"விலிருந்து)

## செப் 11-ல் சிலி ஒருமைப்பாடு தினம் த. நா. வி.ச. வேண்டுகோள்

தோழர்களே,

சிலியில் மக்கள் ஐக்கிய அரசை பாசிஸ்ட் கும்பல் கவிழ்த்திய தினமான செப் 11-ல் "சிலி ஒருமைப்பாடு தினம்" அனுஷ்டிக்க வேண்டும் என்று அகில இந்திய விவசாயிகள் சங்கம் வேண்டுகோள் விடுத்துள்ளது.

ஏற்கனவே, இந்தியத் தொழிற்சங்க மையமும் இதே நாளன்று சிலி ஒருமைப்பாடு தினம் அனுஷ்டிக்குமபடி தனது கிளைகளுக்கு வேண்டுகோள் விடுததுள்ளது.

அந்த வேண்டுகோள்களுக்கு இணங்க, தமிழ்நாடு விவசாயிகள் சங்கத்தின் ஒவ்வொரு கிளையும், சி ஐ டி யூ சங்கங்களுடன் ஒன்று சேர்ந்து, செப் 11ல் பேரணிகளும் பொதுக்கூட்டங்களும் நடத்தி, பாசிஸ்ட் வெறியர்களுக்கு எதிராக போராடும் சிலி மக்களுககு தமது ஆதரவினைத் தெரிவிக்க வேண்டுகிறேன்.

தோழமையுள்ள

கோ. வீரய்யன்

செயலாளர்

தமிழ்நாடு விவசாயிகள் சங்கம்.

# தீக்கதிர்

## நஷ்ட ஈடு கூடவே கூடாது

இந்திய அரசினல் இதுவரை நிருவகிக்கப்பட்டு வந்தவை 103 தனியார் மில்கள்.

நட்டத்தில் நடைபெற்று வந்த இவை மூடப்படாமல் இருக்க அரசு நிருவகித்துவந்தது. இப்பொழுது இவைகளை இந்திய அரசே எடுத்துக் கொள்வதற்கு வகை செய்யும் மசோதாவை நாடாளுமன்றத்தில் நிறைவேற்றப் போவதாக தொழில் முன்னேற்ற அமைச்சர் அன்சாரி அறிவித்துள்ளார்.

'அரசுடைமையாக்குதல்' என்ற பெயரில் முதலாளிகளுக்கு முட்டுக் கொடுக்கும் வேலைகளில் ஈடுபடக் கூடாது.

இந்திய முதலாளிகளுக்கு கொள்ளை லாபம் தரக் கூடிய காமதேனுவாக இருப்பது பஞ்சாலைத் தொழில்.

இந்திய தொழிலாளி வர்க்கத்தை பன்னெடுங் காலமாகச் சுரண்டிக் கொழுத்து வரும் தொழில் பஞ்சாலைத் தொழில்.

ஒரு பக்கம் பஞ்சாலை முதலாளிகள் தங்களது ஆலைகளின் முழுச் சக்தியையும் பயன்படுத்தி துணிகளை உற்பத்தி செய்வதில்லை. அவ்வாறு செய்யாமல், துணிப் பற்றுக்குறையை செயற்கையாக ஏற்படுத்தி விலையை உயர்த்தி கொள்ளை லாபம் அடித்து வருகின்றனர்,

மேலும் உற்பத்தி செய்வதில் பெரும்பகுதியை பதுக்கி விட்டு ஆலைகளின் முழுச் சக்தியை பயன்படுத்தி உற்பத்தி செய்யவில்லை என்று கணக்குகாட்டுகிறார்கள். பதுக்கப்பட்ட துணி கள்ளமார்க்கெட்டில் பகிரங்கமாக விற்பனையாகிறது. கேள்வி கேட்பாரில்லை, இதைத் தடுக்க அரசு நிர்வாக அமைப்பு எதுவுமில்லை.

இது தவிர கள்ள கணக்குகளின் மூலம் கறுப்புப் பணம் விளையாடுமிடமாகவும் இருக்கிறது பஞ்சாலைத் தொழில்.

உற்பத்தி விலை உயர்வு என்ற காரணத்தைக் காட்டி, துணி விலையை உயர்த்த அனுமதிக்குமாறு அரசாங்கத்தை ஆலை முதலாளிகள் கேட்கும் போதெல்லாம் மறுக்கப்படுவதில்லை. இந்திய அரசு விலை உயர்வுகளைத் தாராளமாக அனுமதித்து வருகிறது.

இப்படிப் பல்வேறு வழிகளில் கொள்ளை லாபக்காரர்களின் கூடாரமாக இருப்பது தனியார்களின் பஞ்சாலைத் தொழில்.

பயங்கரக் கொள்ளையடிக்கும் இந்தப் பகல் கொள்ளையர்களிடமிருந்து அனைத்துப் பஞ்சாலைத் தொழில்களையும் எவ்வித நஷ்ட ஈடு கொடுக்காமல் அரசுடமையாக்க வேண்டும்.

மாறாக நட்டத்தில் ஓடும் மில்களை ஈடு கொடுத்து அரசுடைமையாக்குவது திருடர்களுக்கு சன்மானம் வழங்கும் நடவடிக்கையாகும்.

உண்மையிலேயே எந்த மில்லும் நட்டத்தில் ஓடுவதில்லை. மாறாக நட்டத்தில் ஓடுவதாக கள்ளக் கணக்கு காட்டப்படுகிறது.

பஞ்சாலை முதலாளிகள் வேறு வகையான தொழில்களும் நடத்துகிறார்கள். பிர்லாவோ, மபத்லாலோ மில்கள் மட்டுமல்ல, பல ரகமான தொழில்கள் நடத்துகிறார்கள். இத்தொழில்களின் வளர்ச்சிக்குப் பஞ்சாலைகளின் லாபத்தையும் மூலதனத்தையும் பயன்படுத்துகின்றனர். இதனால், பஞ்சாலைகளின் உற்பத்தி நிறுத்தப்படுகிறது. இதற்குப் பெயர் நட்டத்தில் ஓடும் மில்களாம்.

அரசின் போக்கினை நன்கு தெரிந்து பஞ்சாலை முதலாளிகள் திட்டமிட்டு மேற்கண்ட முறையில பஞ்சாலை யந்திரங்களை போதிய அளவு ஓடச் செய்யாமல் சதி செய்தனர்,

பஞ்சாலை முதலாளிகள் செய்த இச்சதி செயல்களினால் ஓடாமல் கிடந்த மில்களை ஓட்டிட மக்களின் வரிப்பணத்தை செலவழிக்க வேண்டி வந்தது. இந்த நிலைமையில் அச்சதிகாரர்களுக்கு அரசு நஷ்டஈடு கொடுக்க வேண்டிய அவசியமென்ன?

நாடு முழுவதும் உள்ள பஞ்சாலைகளை நாட்டுடைமையாக்குவதற்குப் பதிலாக பஞ்சாலை முதலாளிகளின் குறுக்கு வழிகளால் கெட்டுப்போன மில்களை மக்கள் வரிப் பணத்தைக் கொண்டு செலவழித்து திருப்திப்படுத்தப் போகிறார்களாம்.

இதற்குப் பெயர்தான் அரசுடமையா?

## மணியாச்சி ரயில் நிலையம் வீரவாஞ்சி ஆகிறது

சென்னை, ஆக 31—

தேசபக்தர் வ உ சிதம்பரனாருக்கு ஆயுள் தண்டனை அளித்த நெல்லை மாவட்ட கலெக்டர் ஆஷ்துரையை வாஞ்சிநாதன் என்ற வீர வாலிபன் சுட்டுக் கொன்றான்.

ஆஷ் துரை மணியாச்சி ரயில்வேநிலையத்தில்ரயிலில் இருக்கும்போது. இந்தச் சூடு நடைபெற்றது.

சுட்டுக் கொன்ற வாஞ்சிநாதன். தப்பிச் செல்ல வழியில்லாத நிலையில், தன்னையும் சுட்டுக் கொண்டு மாண்டான்.

அந்த தேசபக்தனின் பேரால் மணியாச்சி ரயில் நிலயத்துக்கு வீரவாஞ்சி என்று பெயரிடுமாறு, மத்திய அரசை தமிழ்நாடு அரசு கேட்டுக்கொண்டது. முடிவாக "வீரவாஞ்சி" என்று பெயரிட மத்திய அரசும்சம்மதித்துள்ளதாக முதலமைச்சர் கருணாநிதி மேல் சபையில் தெரிவித்தார்.

## ராஜாஜி கட்சி கோர்ட்டில் நிற்கிறது

சென்னை, ஆக 29—

சுதந்திராக் கட்சியைக் கலைத்து விட்டு புதிய கட்சியோடு இணைக்கக் கூடாது என்றும் அதற்கு அக்கட்சியைச் சேர்ந்த பிலுமோடிக்கோ அவரைப் பின்பற்றுபவர்களுக்கோ அரசியல் சட்டப்படி உரிமை இல்லை என சென்னை சுதந்திராக் கட்சியின் செயலாளர் ஸ்ரீ தமார் பிலுமோடி மீதும் மற்றும் நான்கு பேர் மீதும் சென்னையில் உள்ள 6-வது துணை சிவில் கோர்ட்டில் வழக்குத் தொடுத்துள்ளார்.

மேலும், கட்சிக் கலைப்பை நிறுத்தி வைக்க இடைக்கால உத்தரவு தருமாறும் தனது மனுவில் கேட்டுள்ளார். மூதறிஞர் என பெயர் பெற்ற ராஜாஜி ஆரம்பித்த கட்சிக்கு ஏற்பட்ட பரிதாப நிலை.

## அலுமினியத் திருடர்களுக்கு அரசாங்கம் உதவி

கல்கத்தா, செப் 1—

மத்திய அரசும், மேற்கு வங்க அரசும் அலுமினியம் சம்பந்தமாக கடைபிடிக்கும் கொள்கையினல் மேற்கு வங்க சிறு தொழில்கள் கள்ளமார்க்கெட்காரர்களின் கொடூரப் பிடிக்குள் அகப்பட்டுக் கொண்டு தவிக்கிறது.

மேற்கு வங்கம் முழுவதற்கும் இரண்டு அலுமினிய உற்பத்தியாளர்களே அலுமினிய வார்ப்புக் கட்டிகள், அலுமினியத் தகடுகள் அலுமினிய கவர்கள் முதலியனவற்றை சப்ளை செய்கிறார்கள்.

### சிறு தொழில் பாதிப்பு

இவ்வினியோக முறைகுவிப்பினல் மேற்கு வங்கத்தில் அலுமினியம் உபயோகித்து தொழில் நடத்தும் ஆயிரம் சிறு தொழில்கள் பெரிதும் பாதிக்கப்படுகின்றன.

எனவே, அத்தொழில்களை நடத்துவோர் அரசாங்க உதவியை நாடுகின்றனர்.

ஆனல், அரசின் உதவி பெரும் தொழிற்சாலைகளுக்கே உதவிகரமாக உள்ளது அவர்களுக்குத் தேவையான அலுமினியம் நியாய விலையில் உடனடியாக கிடைத்து விடுகிறது.

சிறிய தொழில் அதிபர்களுக்கோ அரசாங்கம் முறையான உதவிகளை செய்வதில்லை. அரசாங்க உதவியோடு அலுமினியம் வாங்குவதாயிருந்தால் ஒரு டன் அலுமினியத்திற்கு 2970 ரூபாய் வரை செலவழிக்க வேண்டியுள்ளது. அலுமினிய விலைவேறு உள்ளது.

### 100 சதவீத விலைஉயர்வு

எனவே, அரசாங்கத்தின் உதவியைவிட சிறுதொழில் அதிபர்கள் இடைத் தரகர்களின் உதவியை நாடுகின்றனர்.

அவர்கள்தான் மாநிலம் முழுவதும் வினியோகிக்கின்ற இரு அலுமினிய அதிபர்களோடு நேரடித் தொடர்பு கொண்ட பதுக்கல் பேர்வழிகள். அவ்விரு அதிபர்களிடமும் வாங்கி பதுக்கல் செய்து விடுபர்கள்.

சிறுதொழில் அதிபர்களோநேரடியாக அவ்விரு வினியோகஸ்தர்களிடமும் அலுமினியம் கேட்டால் பல்வேறு காரணங்களை கூறி மறுத்து விடுகின்றனர். ஏனெனில் அக் கள்ளமார்க்கெட்காரர்களோடு இவ்வினியோகஸ்தர்கள் கூட்டாளிகளாவர்.

எனவே, பதுக்கல் பேர்வழிகளிடமே 100 சதவீத விலை உயர்வு கொடுத்து அலுமினியம் வாங்குகிறார்கள்.

### அரசாங்கத்தின் வேலை

இத்தனை இடைஞ்சல்களும் சிறுதொழில்களுக்கு இருப்பது மத்திய— மாநில அரசுகளுக்குத் தெரியும்.

தெரிந்திருந்தும் அத்தொழில்களுக்கு ஏற்படும் நெருக்கடியைத் தீர்க்க முறையான, தேவையான நடவடிக்கை எடுக்காதிருப்பது கள்ளமார்க்கெட்காரர்களுக்கு வடிக்கையாளர்கள் ஏற்படுத்தித் தருவதுதானே காரணம்?

## மது குடிக்க நிபந்தனை

சென்னை, செப். 1—

தமிழ்நாட்டில் செப்டம்பர் 1முதல சாராயம், விஸ்கி, ஒயின் முதலான மதுபானம் விற்கும் சுமார் 4500 கடைகள் மூடப்படுகின்றன.

மது குடித்தால்தான் இவர் உயிரோடு இருக்க முடியும் என்று டாகடர் சர்ட்டிபிகேட்டும், அத்துடன் ரூ 520 கொடுத்து பெர்மிட் கட்டணமும் செலுத்தினல், மூக்குமுட்ட குடிக்கலாம்.

மதுவிலக்கினல் ரூ 56 கோடி இழப்பு ஏற்படுமாம்.

பெர்மிட் இல்லாமல் குடிப்பவர்களும, காய்ச்சுகிறவர்களும், பிடிபட்டால் 1-9-74 முதல் சிறைக்குள் தள்ளப் படுவார்கள்.

## பீடி முதலாளிகளின் சதியை தடுத்து நிறுத்துக

### அமைச்சர் ராஜாராமிடம் வி. பி. சி, வே. கண்ணன் வற்புறுத்தல்

சென்னை. செப். 2—

பீடித் தொழிற்சாலைகள் அதன கிளை நிறுவனங்கள் (காண்ட்ராக்ட் முறை என கூறப்படுவது)ஆகியவற்றை உடைத்து 'அவுட் ஓர்க்' [வெளியே வேலை தருவது) தருவதற்கு டிரேட் மார்க் பீடி முதலாளிகள் சதித்திட்டம தீட்டி வருகிறார்கள் என்றும், இதை அவசர உத்திரவு மூலம தடுத்து நிறுத்த வேண்டும் என்றும் தமிழக சி ஐ டி யூ துணை தலைவர் வி பி சிந்தன், தமிழ்நாடு பீடித் தொழிலாளர் சம்மேளனம் [சி ஐடி யூ) பொதுச் செயலாளர் வே கண்ணன் ஆகிய தோழர்கள் வற்புறுத்தியுள்ளனர்.

இவ்விருவரும், கடந்த ஆக 27ந் தேதியன்று இங்கு தொழிலாளர் அமைச்சர் க ராஜாராமைச் சந்தித்து மகஜர் ஒன்றை அளித்து, மேற்கண்ட கோரிக்கையை வற்புறுத்தினர்.

### 'அவுட் ஓர்க்' அம்பலம்

மேலும், சட்டப்படி லைசென்ஸ் பெற்றுக் கொண்டு தொழிலாளர்களை வேலைக்கு அமர்த்தவில்லை என்றும்—மாறாக, சட்டத்திலுள்ள வாராந்திர, வருடாந்திர விடுமுறைக் கூலியை தொழிலாளர்களுக்கு கொடுககாமல் ஏய்பபதற்காக இவ்வாறு 'அவுட் ஓர்க்' திட்டத்தில் இறங்கியுள்ளனர் என்றும் எடுத்துக்கூறப் பட்டது.

### முக்கூட்டு மாநாடு கூட்டுக

எல்லாத் தொழிலாளர்களுக்கும் சுதந்திர தினம், மற்றும் தேசிய பண்டிகை நாட்களுக்கு விடுமுறைநாள் கூலி கொடுக்க வேண்டும் என்று சட்டத்திருத்தகெஜட் நோட்டிபிகேசன் கொணடு வர வேண்டும் என்றும், பீடித் தொழிலாளர் பிரச்னைகள் குறித்து விவாதிக்க முத்தரப்பு மாநாடு ஒன்றைக் கூட்டவேண்டும் என்றும வற்புறுத்தப்பட்டது.

மகஜரைப் பெற்றுக் கொணட அமைச்சர் தொழிலாளர் ஆணையாளரைக் கலந்து யோசித்து மாநில ரீதியில முக்கூட்டு மாநாடு கூட்ட ஏற்பாடுசெய்வதாகக் கூறினர்.

## ஆசிரியருக்கு...

### கல்லூரிப் பேராசிரியர்களின் துயர நிலைமை

ஐயா,

சங்கரன்கோவில் மடத்துப்பட்டி கோபால் நாயக்கர் கல்லூரி 1968-ல் தொடங்கியது. கல்லூரிநிர்வாகி;நாட்டில் நிலவிவரும் வேலையில்லாத் திண்டாட்டத்தைச் சாதகமாக்கிக் கொண்டு ஆசிரியர்கள் வயிற்றில் அடித்துவந்தார். கொடுக்கப் பட்டு வந்த அரைகுறை சம்பளத்தையும் பல மாதங்கள் கொடுக்கப்படாமல் பட்டினி கிடந்து பரிதவிக்கும்படி செய்தார். சம்பளம் கேட்ட ஒரே காரணத்துக்காக எல்லா ஆசிரியர்களையும் சென்ற ஆண்டு வேலையிலிருந்து நீக்கிவிட்டார்.

நாங்கள் இந்த கொடுமையைப் பற்றித தமிழக அரசுக்கும். மதுரைப் பல்கலைக் கழகத்திற்கும் தெரிவித்துப் பரிகாரம் கோரினேம். அதன் தொடர்பாகக் கல்லூரி நிர்வாகிக்கும் பல்கலைக் கழகத்துக்கும் ஏற்பட்ட பலப் பரீட்சையில் கல்லூரிக்கு வழங்கிய அங்கீகாரத்தைப் பல்கலைக் கழகம் ரத்து செய்து விட்டது, வேலையிழந்த ஆசிரியர்களுக்கு வேறு கல்லூரிகளில் வேலைபோட்டுத்தருவதற்குப் பல்கலைக் கழகம் பொறுப்பு ஏற்றுக்கொண்டது. ஆயினும் இதுவரை நிறைவேற்றப்படவில்லை.

இந்தக் கல்லூரியில் வேலைபார்த்த ஆசிரியர்கள் அனைவருக்கும் மதுரைப் பல்கலைக் கழகத்தில் இணைப்பு பெற்ற பல்வேறு கல்லூரிகளில் வேலை கொடுததாய் விட்டது என்றவிவரம் உயர் நீதிமன்றத் தீர்ப்பினை ஒட்டி செய்தித் தாளில் வெளியாகி இருந்தது.

எல்லோருக்கும் வேலை கொடுத்தாய் விட்டது என்பது உண்மையில்லை. ஒரு சிலர் தவிர மற்ற எல்லோருமே இன்னும் வேலையில்லாமல் தான் கஷ்டப்படுகின்றேம். இதற்கிடையில் எங்களுக்குச்சேரவேண்டியசம்பள பாக்கியும் கல்லூரிக் கல்வி டைரக்டரால் நிறுத்திவைக்கப்பட்டுள்ளது.

சென்ற ஓராண்டுகாலமாக நாங்கள் வேலையில்லாமல் அவதிப்படுகின்றேம், பலமுறை முறையிட்டும் அரசும், பல்கலைக் கழகமும் எங்கள் துயரை இதுவரை போக்கவில்லை. விலைவாசி ஏற்றம ஒருபுறம், வேலையில்லாததிண்டாட்டம்ஒருபுறம். இடையில் சிக்கித் தவிக்கும் எங்கள் நிலைமை சொல்ல முடியாத வேதனை நிரம்பியது.

பாதிக்கப்பட்ட ஆசிரியர்களுக்குத் தமிழக அரசு வேலைக்கு உடனடியாக உத்தரவிடுமா? சேர வேண்டிய சம்பளப் பாக்கியை உடனடியாக வழங்குமா?

நாட்டின் பெருமைக்கு உரிய உயர்கல்வி வளர்ச்சிக்கு முதுகெலும்பாக மதிக்கப்படும் ஆசிரியர்கள் வடிக்கும் ரத்தக்கண்ணீரை இந்த அரசு அனுதாபத்துடன் கவனித்து வாழ வழி வகுக்குமா?

இப்படிக்கு

பாதிக்கப்பட்ட கல்லூரி பேராசிரியர்கள் சங்கரன்கோவில்.

## அரசின் கையாலாகாத்தனம் உரக் கலவை தொழிலாளர் பட்டினி

பாளையங்கோட்டை. ஆக. 31—

பாளையங்கோட்டை ஷாவாலஸ் உரக் கலவை கம்பெனியில் 30 தொழிலாளாகள் வேலை பார்த்து வருகிறார்கள். இவர்கள் யூரியாவை மற்ற உரங்களுடன் கலந்து கலப்பு உரம் தயாரித்து வருகிறார்கள்.

ஆனல் கடந்த 5 மாதங்களாக யூரியா இங்கு கிடைக்காத காரணத்தினல் கலவைசெய்ய முடியவில்லை என்று நிருவாகத்தினர் கூறுகிறார்கள்.

### தொழிலாளர்கள் அவதி

நிர்வாகத்திடம் கேட்டால் அரசாங்கம யூரியா சப்ளை செய்ய நீங்கள் போராடுங்கள். அரசு யூரியா சப்ளை செய்தால் நாங்கள் வேலை தருகிறேம் என்று கூறுகிறார்கள். கலவை உரம தயாரிப்பது நிறுத்தப்பட்டிருக்கின்ற காரணத்தினல் 30 தொழிலாளர்களும் வேலையில்லாமல் மிகவும் கஷ்டப் படுகிறார்கள்.

கலவை உரம் தயாரிக்க யூரியா சப்ளை செய்ய மாவட்ட ஆட்சித தலைவரை சங்கத்தலைவர் தோழர் எஸ் பாலவிநாயகம் சந்தித்து தொழிலாளர்களின் நிலைமையை விளக்கிக் கூறினர். அதற்கு அது சம்பந்தமாக சென்னையில உள்ள விவசாய டைரக்டரை பார்க்கும்படி கூறியுள்ளார்கள்.

### அதிகாரிக்கு கடிதம்

30தொழிலாளர்கள்இங்கு இருப்பதால் சட்டப்படியான லே-ஆப் சம்பளமும் இவர்களுக்கு கிடையாது, கலப்பு உரம் தயார் செய்ய, யூரியா சப்ளைசெய்ய சங்கம், சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கு கடிதம் எழுதியுள்ளது.

சி. ஐ. டி. யூ. புதிய வெளியீடு

**'பணவீக்கத்துக்கும் ஊதிய முடக்கத்துக்கும் எதிராக...'**

தோழர் பி. டி. ரணதிவே எழுதியது

விலை 60 காசு (தபால் செலவு தனி)

**கிடைக்குமிடங்கள்:**

★ சி. ஐ, டி. யூ. மத்திய அலுவலகம், 172, லெனின் சாரணி, கல்கத்தா 700013

★ நேசனல் புக் ஏஜெண்சி (பி) லிட்., 12 பங்கிம் சாட்டர்ஜி தெரு கல்கத்தா - 700012

## புதுக்கோட்டையில் மக்கள் நல மன்ற திறப்பு விழா

புதுக்கோட்டை, செப். 2—

அண்மையில் புதுக்கோட்டை காமராசர்புரத்தில் வழக்கறிஞர் திரு. கு, ஜெயராமன், மக்கள் நல மனறத்தைத் திறந்து வைத்தார்.

மன்றத் தலைவர் ப, ஷண்முகம் தலைமையில் நடந்த விழாப் பொதுக்கூட்டத்தில் பெரி. குமாரவேல், சி. கே. ரங்கசாமி ஆகியோர் வாழ்த்துரை வழங்கியபின், தோழர் ஐ. மாயாண்டி பாரதியை நடுவராகக்கொண்டு— விலைவாசி உயர்வுக்குக் காரணம் ஜனப் பெருக்கமா? பணப் பெருக்கமா? என்றதலைப்பில் பட்டிமன்றம் நடந்தது.

'பணப பெருக்கமா' அணியில் புரட்சிதாசன், முத்து பாலன், மணவாளன் ஆகியோரும்— "ஜனப்பெருக்க" அணியில், பி, பாரதி, தமிழ் தாசன், அனந்த நேசன ஆகியோரும் வாதிட்டனர்.

பணப் பெருக்கமே என்று காரண காரியங்களைச் சொல்லி. நடுவர் மாயாண்டி பாரதி தீர்ப்பளித்தார்.

மன்றச்செயலாளர் இரா. இராஜேந்திரன் நன்றிநவின்றார்.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக்குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (6/16 லைசன்ஸ் ரோடு மதுரை,625018) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் கே. முத்தையா

## இரயில்வே போரா[ட்ட] தியாகி இர[...] குடும்ப உத[வி]

(18—7—74-க்குப் பிறகு வரவு[...]

**சென்னை**

| | | |
|---|---|---|
| இந்தியன் டுபாக்கோ ஆசீர்வாதம் மூலம் | [illegible] | [illegible] |
| ஜனநாயக மாதர் சங்கம் | 32 | 25 |
| மெட்டல்பாக்ஸ் நிறுவன தொழிலாளர்கள் | 125 | [illegible] |
| பி, அண்ட் சி. மில் தொழிலாளர்கள் | 50 | 00 |
| சேத்துப்பட்டு கிளை— | 51 | 00 |
| சவேரா ஹோட்டல் தொழிலாளர்கள் | 83 | 00 |
| பி. வி. முத்து | 12 | 00 |
| கே. சி. பி. தொழிலாளர்கள் | 45 | 00 |
| புரசைவாக்கம் கிளை | 50 | 00 |
| மேத்தா நகர் கிளை | 60 | 00 |
| திருவல்லிக்கேணி கிளை | 44 | 00 |
| ராயப்பேட்டை கிளை | 40 | 00 |
| மெயில் கிளை | 50 | 00 |
| திண்டுக்கல் கொட்டப்பட்டி— ஆவுணியப்பன் மூலம் | 28 | 28 |
| திண்டுக்கல் காவலப்பட்டி கிளை— சுப்பராயலு மூலம் | 15 | 00 |
| பல்லடம் கட்சிக் கிளை ராமசாமி மூலம்— | 7 | 00 |
| அருப்புக்கோட்டை திருநகரம் கட்சிக்கிளை —கந்தசாமி மூலம் | 8 | 00 |
| அ இ. த. தொ. ஊழியர் சங்கம்— நாலாம் பிரிவு—மதுரை...... | 75 | 00 |
| மேட்டுப்பாளையம் உன்னிபாலன் எம். சி....... | 10 | 00 |
| திருப்பூர் லிங்க் நிட்டிங் தொழிலாளர்கள்...... | 20 | 00 |
| நீலகிரி மாவட்டம் சோசலிஸ்ட் வாலிபர் முன்னணி | 5 | 00 |
| ஈரோடு கோட்டம் அனைத்திந்திய தந்திப் பொறியியல் ஊழியர் சங்கம 3-வது பிரிவு— | 20 | 00 |
| நெல்லைமாவட்டம் பஞ்சாலைதொழிலாளர்சங்கம் | 10 | 00 |
| திருச்சி பணிமனை—அரசு போக்குவரத்து ஊழியர் சங்கம் | 11 | 00 |
| அருப்புக்கோட்டை கந்தசாமி மூலம் | 4 | 00 |
| மதுரை தாலுகா பாலமேடு கட்சிக்கிளை— | 10 | 00 |
| பேட்டைவாய்த்தலை குமாஸ்தா என். சீனிவாசன் மூலம் | 3 | 00 |
| மேலூர் தாலுகா தருகுவளையப்பட்டி கிளை | 10 | 00 |
| அருர் ஜனநாயக மாதர் சங்கம் கருப்பாயம்மாள் மூலம் | 3 | 00 |
| கோவை மாவட்ட கட்சி அலுவகம் ஏ. சுந்தரம் மூலம் | 11 | 00 |
| கோவை மாவட்ட மில் லேபர் யூனியன் ஓம்பராசக்தி மில் தொழிலாளர்கள் | 65 | 00 |
| திருப்பூர்—ஷெல் நிட்டிங் கம்பெனி | 10 | 00 |
| ஈரோடு ஜெனரல் ஒர்க்கர்ஸ் யூனியன் | 5 | 00 |
| திமிரி. ஆர். இ. கிருஷ்ணமூர்த்தி | 2 | 00 |
| சேலம் என். சி. சி ஆர். எஸ். கிளை பாலசுந்தரம் மூலம் ஓமலூர் தோழர்கள் | 10 | 00 |
| பழய வத்தலக்குண்டு கட்சிக் கிளை | 5 | 00 |
| ராமராஜபுரம்—அங்குபிள்ளை— பள்ளிச்செல்வம் திருமணம் | 5 | 00 |
| சிதம்பரம் தாலுகா குமராட்சி கூட்டத்தில் தோழர் ஏ. பி. வசம் | 20 | 00 |
| திண்டுக்கல் தாலுகா வரதராஜபுரம் கட்சிக் கிளை | 8 | 00 |
| கீழையூர் வீர. வீரணன் | 2 | 00 |
| எரியோடு கட்சிக் கிளை | 10 | 00 |
| வேடசந்தூர் கட்சிக் கிளை | 10 | 00 |
| அய்யலூர் கட்சிக் கிளை | 10 | 00 |
| மீனாட்சிபுரம் விவசாய சங்கக் கிளை | 5 | 00 |
| வெங்கலூர் வி. ச. கிளை | 5 | 00 |
| பாலு மருந்துக் கடை | 25 | 00 |
| அய்யலூர் டீ கடை மணி | 1 | 00 |
| ஈரோடு கிளை என். சி. சி. ஆர். எஸ். கூட்டு கன்வீனர் பொன்னமபலம் மூலம் | 50 | 00 |
| மதுரை தாலுகா சம்மட்டிபுரம் கட்சிக் கிளை | 10 | 00 |
| " ஆனையூர் " | 9 | 14 |
| " கோ. பாப்பாகுடி " | 17 | 00 |
| " சூயேஜ் பாம் " | 9 | 77 |
| கரூர் ரயில்வே காலனி—செயலாளர் | 5 | 00 |
| முகவை மாவட்டம்-துரைசாமிபுரம் கட்சிக்கிளை | 15 | 00 |
| " ஸ்ரீரங்கபாளையம " | 15 | 00 |
| திருப்பூர் ஹரிசுதா நிட்டிங் கம்பெனி தொழிலாளர்கள் | 11 | 50 |
| குமரி மாவட்டம் அரசு போக்குவரத்துத் தொழிலாளர்கள் சங்கம் | 25 | 00 |
| " தோட்ட " " | 11 | 75 |
| மதுரை நகர் கமிட்டி சார்பில் | 217 | 07 |
| கரூர் கிளை எல். ஐ. சி. சார்பாக | 70 | 00 |
| ஒலவக்கோடு என் சி சி ஆர் எஸ் கோபிநாதன் | 5 | 00 |
| தூத்துக்குடி " கிளை சிவசுப்ரமணியன் | 5 | 00 |
| ஆந்திர மாநிலம்கதரி என் சி சி ஆர் எஸ் கிளை கௌரிசங்கர் | 10 | 00 |
| மைசூர் பாதிக்கப்பட்ட ரயில்வே தொழிலாளர் வெங்கடேஷ் மூலம் | 15 | 00 |
| திருச்சி ஆட்டோ ரிக்ஷா தொழிலாளர் சங்கம் | 10 | 50 |
| மதுரை நகர் கமிட்டி கடைசித் தவணை | 209 | 00 |